[7th March 1961

மூடப்படப்போகிறது என்று இதற்குள் முடிவுக்கு வருவது நல்ல தல்ல. அந்த மாதிரியான எண்ணம் அரசாங்கத்திற்கு இல்லை என்று தெரிவித்துக்கொள்கிறேன்.

*Pablo boats*

* 650 *Q.*—SRI K. VINAYAKAM : Will the Hon. the Minister for Local Administration be pleased to state—

(*a*) how many Pablo boats are operating in the Ramanathapuram district under Government subsidy scheme;

(*b*) the total allotment made to this district;

(*c*) if more allotment has been made the reason for not having given the entire number of Pablo boats to this district; and

(*d*) whether some applications for allotment were rejected and if so, on what grounds?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : (*a*) Seven Pablo boats are operating in the Ramanathapuram district. Of these two are operated by the Inshore Fishing Station, Rameswaram.

(*b*) The total allotment made for the district was eight Pablo boats.

(*c*) & (*d*) The entire number of boats allotted could not be given on hire-purchase system as some of the applications were rejected in view of the fact that they did not satisfy the conditions for supply of Pablo boats on hire-purchase system and in some cases adverse reports from the Customs authorities were received.

SRI K. VINAYAKAM : Sir, may I know whether even though larger quantity of Pablo boats was allotted to this district lesser number was given to them actually, because the Customs Department had recommended that on suspicious grounds these boats, if allotted, would be indulging in smuggling?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : As they did not satisfy the conditions prescribed they were not allotted boats.

SRI K. VINAYAKAM : May I know, Sir, what are the conditions which were imposed upon them which they were unable to satisfy as per the requirements of the rules and regulations?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : Pablo boats are given on the basis of Assistant Director's recommendation. An advance deposit of Rs. 5,000 to 30 feet and Rs. 4,000 for 25 feet should be made. The rest of the amount is recovered in instalments spread over seven years. I have already answered the other part of the question.

7th March 1961]

SRI K. VINAYAKAM : Would the Government be pleased to allot the required number of boats if the people who applied for this allotment satisfy these conditions at least this year?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : There would be no difficulty if they satisfy the conditions.

MR. SPEAKER : Questions are over.

**[Not.—An asterisk (*) at the commencement of a speach indicates revision by the Member].**

## II.—GENERAL DISCUSSION ON THE BUDGET FOR THE YEAR 1961-62—*cont.*

**MR. SPEAKER :** நாமெல்லோரும் எண்ணிக்கொண்டிருந்தது என்னவென்ருல் இன்றைய தினம் முதலில் கனம் அங்கத்தினர் ஸ்ரீ கல்யாணசுந்திரம் பேசலாம், அதன் பிறகு கனம் அங்கத்தினர் அண்ணுதுரை பேசலாம், அதன் பிறகு கனம் நிதி அமைச்சர் ஸ்ரீ சுப்பிரமணியம் விவாதத்திற்கு பதில் அளிக்கலாம் என்பது. ஆனல் கனம் அங்கத்தினர் கல்யாணசுந்திரம் ஏதோ சில தவிர்க்க முடியாத காரணங்களினல் சென்னைக்கு வரமுடியவில்லை என்று இன்றைய தினம் தகவல் வந்துள்ளது. ஆகையினல் அவர் பேசப் போவதில்லை. இப்போது கனம் அங்கத்தினர் ஸ்ரீ அண்ணுதுரை பேசுவார். அவர் பேசிய பிறகு நிதி அமைச்சர் அவர்கள் விவாதத் திற்குப் பதில் அளிப்பார்.

**SRI C. N. ANNADURAI :** சட்ட மன்றத் தலைவர் அவர்களே, இந்த ஆண்டு நிதி நிலை அறிக்கையைப் பற்றி என்னுடைய கருத் துக்களை எடுத்துச் சொல்லிக்கொண்டு போகின்ற நேரத்தில், அதிலுள்ள குறைபாடுகளை எடுத்துச் சொல்லுகின்ற அவசரத்தில் அமைச்சரவை செய்திருக்கின்ற சில நல்ல காரியங்களைப் பாராட்டாமல் விட்டு விடுவோனே என்ற பயத்தில் முதலில் இந்த அமைச்சரவை செய்திருக்கின்ற இரண்டொரு நல்ல காரியங்களை நான் மனதாரப் பாராட்டுகிறேன். ஜனநாயகத்திலே தங்களுக்கு இருக்கின்ற எண்ணிக்கை பலத்தை வைத்துக் கொண்டு அவர்கள் தமிழகத்திற்குச் செய்யவேண்டிய மிகச் சாதாரண கடமைகளைக்கூட விட்டு விடுவார்களோ என்று நாங்க ளெல்லாம் மன வேதனைப்பட்டுக்கொண்டு இருந்த பிரச்னையில் இந்த நாட்டுக்குத் தமிழ் நாடு என்ற பெயரை இந்த அமைச்சரவை சூட்டியிருப்பது, ஓரளவிற்கு அதில் சில குறைபாடுகளும் குந்தகங் களும் இருக்கின்றன என்ருலும் ஒரு நல்ல முயற்சியில் அடி எடுத்து வைத்திருக்கிருர்கள் என்ற அளவில் அவர்களை நான் பாராட்டக் கடமைப்பட்டிருக்கிறேன். அதைப் போலவே இலவசக் கல்வியை எல்லா ஏழை மாணவர்களுக்கும் 11-வது வகுப்பு வரையில் அவர்களுக்கு இருக்கின்ற இலவசக் கல்வியை அதிகப்படுத்துகின்ற திட்டத்தை ஏற்றுக்கொண்டிருப்பதும் பாராட்டத் தக்கதாகும். அவர்களைப் பாராட்டும் நேரத்திலேகூட இப்படிப்பட்ட காரியங்களைப் பற்றி எதிர் தரப்பிலே உள்ள கட்சிக் காரர்கள் ஆகிய . . .